# குருநாதன் அந்தாதி



மணிவிழா மலர்

1967

ஆசிரியர்:

மகான் - வண்ணச்சரபம்

அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்.

# குருநாதன் அந்தாதி



மணிவிழா மலர்

1967

ஆசிரியர் :
மகான் - வண்ணச்சரபம்
அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்.

உ

குருவே துணை.

# முன்னுரை.

குருநாதன் அந்தாதி என்ற இந்நூல் மகான்—வண்ணச் சரபம் அருள்மிகு தண்டபாணி சுவாமிகள் அருளிய நூல்கள் பல வற்றுள் ஒன்றாகும். அந்தம்+ஆதி=அந்தாதி. அதாவது ஒவ்வொரு பாட்டின் அந்தமாகிய முடிவு, அடுத்த பாட்டின் ஆதியாகிய முதலாவதாக அமையும். மேலும் நூல் ஆரம்பத்தில் எச்சொல் முதலாவதாக அமைந்துள்ளதோ அதுவே நூலின் முடிவிலும் அமைவதென்பதோர் சிறப்பையுமுடையதாகும். இவ்வரிய அந்தாதி நூலில் கலியுக வரதனும் கந்தப்பெருமான் புகழ் மொழிகளைத் தொகுத்துக் கூறப்பெற்றுள்ளது.

குரு என்ற சொல் ஆசானாக வரும் எவர்க்கும் பொருந்தும். தனக்கு அறியாத ஒன்றை அறிவிப்பவர் 'குரு' என வழங்குவது பொது. ஆனால் திருவுருவ உபாசனைக்குரிய அருமறையை உப தேசிக்கும் குருவை, நம்போன்றவர் என்று கொள்ளாமல் அகண்ட வியாபகப் பரம்பொருளே இவ்வடிவில் வந்ததென்று கொள்வதும், வழிபடுவதும் உயர்ந்த சிறப்பியல்பாகும். மேலும் சகளமாயுள்ள எந்தத் தெய்வ வடிவமும், பரம்பொருள் கொண்ட திருவுருவம் என்று கொள்வதும், அவ்வுருவம் குரு என்று கொள்வதும் உண்டு. மேற்கண்ட முறை மூன்றில் உருவ வழிபாடு கௌமாரம் என்று பெயர் பெறும்.

இவற்றிற்கெல்லாம் ஆதாரமாய் குருத்துவத்துக்கே தனிச்சிறப் புடையவன் முருகப்பெருமான். ஆதிசிவனார்க்கும் அருமறை உப தேசித்துக் குருத்துவத்தை விளக்கினதும் சிந்தித்தறிதற்பாலதாகும். "குருவெல்லாம் சுப்ரமணியக் கொழுந்தேயாகும்" என்பது காண்க. அத்தகைய முருகப்பெருமானை அருணகிரிநாதர் நேரே கண்டு திரு வருள் பெற்றவர். கந்தரனுபூதி 51—வது பாடலில் குருவாய் வருவாய் அருள்வாய் குகனே என்று கூறியுள்ளதும் இதனை வலி யுறுத்தியேயாகும் என்க.



மகான் – வண்ணச்சரபம்

**அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்**

28—11—1839. 5—7—1898.

அத்தகைய குருவானவன் முருகப்பெருமானே எனக் கண்டுணர்ந்து அருள்மிகு. **தண்டபாணி சுவாமிகள்** இந்த நூலை அருளியுள்ளனர். ‘குரு’ என்ற சொல் அஞ்ஞான இருளை நீக்குபவன் என்ற பொருள்தரும். திருவருள் அவதாரமாக வரும் பெரிய அருளாளர்களும்கூட ஒரு ஆசான் மூலம் உண்மைநிலை அறிந்ததாகவே காண்கிறோம். இவ்வகையில் குரு பலராவர் என்பதை,

தெய்வக் குருவும் செயகுருவும் செய்குருவும்
சைவக் குருவும் தவக்குருவும் – உய்வ(து)
அறியாக் குருவும் அனந்தக் குருவும்
குறியாகக் கொண்ட குரு.

என இந்நூலாசிரியர் சுவாமிகள் தனிப்பாடல் ஒன்றில் கூறியுள்ளார்.

இவ்வரிய நூலையருளிய மகான் வண்ணச்சரபம் அருள்மிகு **தண்டபாணி சுவாமிகள்** திருநெல்வேலியில் 1839.ல் வேளாண் மரபில் அவதரித்து இளமைமுதல் வேற்பூசை, ஆறெழுத்தருமறை தியானம் செய்து முருகனருளால் புதுக் கவிபாடும் தன்மைவாய்ந்து, புலவர் புராணம், தமிழலங்காரம், அறுவகை இலக்கணம்போன்ற எண்ணிலாத நூல்களை அருளி, பல தலம் வழிபட்டு ஆங்காங்குள்ள இறைவர்மீது எண்ணற்ற பதிகங்கள் பாடி, சென்றவிடமெல்லாம் சீவகருணைத்திறம் வளர்த்து, பலருக்கும் அருட்குருவாகி உபதேசம் செய்து அருளாடல் பலசெய்து இறுதியில் 1898–ல் திருவாமாத்தூர்ச் சிவதலத்தில் தங்கித் தவம்புரிந்து ஞான சமாதி கொண்டனர். இவரால் பாடியருளிய பாடல்களுள் தற்போது ஐம்பதாயிரத்திற்கும் மேல் கைவசமுள்ளன. அவை அனைத்தும் தமது கரங்கொண்டே பனையோலைச் சுவடியில் எழுதினர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

முருகப் பெருமானையே தமது குருவாகக்கொண்ட சுவாமிகள், குருநாதன் அந்தாதி என்ற இந்நூலையும் அருளியுள்ளனர். முருகன் புகழை விளக்கும் இந்நூல், நூலாசிரிய சுவாமிகள் பெயரரும், சந்தப் புலமை தவத்திரு. செந்திநாயக அடிகள் மகனாரும், மாணவரும், திருவாமாத்தூர் கௌமார மடாலயம், பழநி ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் மடம் தலைவரும், அடியேனது தந்தையாருமான தவத்திரு. **தி. செ. முருகதாச ஐயா** அவர்கட்குப் பிலவங்க ஆண்டு,

சித்திரைத்திங்கள், 11-ம் நாள் (24—4—67) திங்கட்கிழமையன்று அறுபதாம் ஆண்டு நிறைவு மணிவிழா மயிலம், பொம்மபுர ஆதீனம் 19-வது பட்டம் மகா சந்நிதானம் சிவத்திரு. **சிவஞான பாலய சுவாமிகள்** அவர்கள் தலைமையில் திருவாமாத்தூரில் நிகழ்ந்தபோது மணிவிழா மலராக வெளியிடப்பெறுகிறது. விழாவிற்குத் தலைமை தாங்கி நடத்திக்கொடுத்த மயிலம்-சிவத்திரு. ஸ்ரீ சந்நிதானங்கட்கும், பொன்னுடை போர்த்திச் சிறப்பித்த சென்னை-சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழக முதல்வர், திரு. வ. சுப்பையாபிள்ளை அவர்கட்கும், நூல் வெளியிட்டுதவிய மயிலம்-சி. பா. சு. தமிழ்க்கல்லூரித் தலைவர், புலவர், திரு. ஆ. சிவலிங்கனார் அவர்கட்கும், பாராட்டுரை வழங்கிய விழுப்புரம்-வழக்குரைஞர். திரு. P. S. வெங்கடேச ஐயர், விழுப் புர நகராட்சி மன்றத்தலைவர், டாக்டர், து. தியாகராசன், விழுப்புரம்-திரு. புலவர், ந. ஆறுமுகம், சென்னை-திரு, M. சுப்பையா, விருது நகர்-திருமதி, தி. சுந்தராம்பாள், M. A., விழுப்புரம்-புலவர், திரு. மு. சரவணபவன், விழுப்புரம்-புலவர் ச. சுந்தரேசன், திருவாமாத் தூர்-ஊராட்சித் தலைவர், திரு. தி. கு. இராமசாமி முதலியார் ஆகிய அனைவருக்கும், சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து போற்றிப் படிக்கும் அன்பர்களுக்கும், குருநாதன் திருவருள் உண்டாகுமாறு வேண்டுகிறேன்.

வண்ணச் சரப மகான்செந்தி ஞயகனார்
தண்ணருட்சீர் சேய்முருக தாசநற்பேர்—அண்ணல்
பெறுமறுப தாண்டுநிறை பெற்றவிழாக் கொண்டாங்(கு)
உறுதிகொள்க நூறாண் டுவந்து.

இன்னணம்,
அன்பன்,
**தி. மு. சங்கரலிங்கம்,**
தமிழாசிரியன்.

கௌமாரமடாலயம்,
திருவாமாத்தூர்,
24—4—67.

உ

முருகக்கடவுள் துணை.



# குருநாதன் அந்தாதி.

---

### காப்பு - வெண்பா.

ஒருநாத ஞகியொப்பில் ஓங்காரத் துற்ற
குருநாதன் அந்தாதி கூறிப்—பெருநாதன்
என்னும் பெயர்பெற்(று) இகபரத்தில் வாழ்வதற்குப்
பொன்னுறழ்வே லாயுதம்காப் பு.

### நூல்.

### கட்டளைக் கலித்துறைகள்.

திருவரு ளாற்ருெழில் [1]ஐந்தும் புரியும் சிவன்தனக்குச்
சருவ சடாக்கரத் துண்மையைப் போதித்த சண்முகனும்
ஒருவனே யேகுரு நாதன்என் றேத்தி உருகுமென்னேர்
வருவதற் கன்னவன் ஒப்பா திருப்பது வஞ்சகமே. 1

வஞ்சக மேன்நின் மலர்த்தாளை நாடி வணங்குமென்றன்
நெஞ்சகம் இப்படி வாடிடக் காண்பது நீதிகொல்லோ?
வெஞ்சகத் தார்நிந்தை கேட்பதற்(கு) ஆளென விட்டுவிடேல்!
[1] அஞ்சக ளக்குரு நாதா!பல் கோடிவெற் பாள்பவனே. 2

---

காப்பு: ஒப்பற்ற முதல்வனுகிப் பிரணவத்தின் உட்பொருளாயுள்ளவன் குருநாதன். அவனைப் பாடும் பேற்ருல், உலகம் பெரியவனென்று கூறும்படி வாழ்ந்து, இவ்வுலகத்தும் மறுவுலகத்தும் வாழும் பேறு விழைந்து இது கூறுகின்றேன். இதற்கு ஞானஒளி வீசும் வேலாயுதம் துணை என்பதாம்.

1. 1. படைப்பு, காப்பு அழிப்பு, மறைப்பு, அருளல் என்பன ஐந் தொழில்.

2. 1. அழகிய திருவுருவமுடைய.

ஆளாகிக் கொண்டவர் போற்பல வார்த்தை அறைந்தபின்னர்
மீளாத் துயரக் கடலூ டுழல விடுத்தனையே!
தோளார்ந்த கிள்ளைக் குருநா தனே!மெய்த் தொழும்பரெதிர்
தாளால் நடந்தொரு தண்டோடு தோன்றும் தனித்தெய்வமே ! 3

தெய்வம்எல் லாமும்நின் சீர்வடி வேஎனத் தேர்ந்தபின்னும்
உய்வதெவ் வாறென் றெனைவாட விட்டிங் (கு) உறங்கல் நன்றே?
சைவமுற் கூறும் சமயங்கள் [1]ஆறினும் சார்ந்(து)உதவி
செய்வதற் கான குருநாத னே!அயிற் சேவகனே. 4

[1]சேவேறும் ஈசன்,முன் நால்வருக் கீந்த திறமைஎண்ணிப்
பாவேறப் பாடிநின் தாட்கணிந் தேன்அருட் பார்வைகொண்டு
பூவேறும் [2]மங்கையர் இன்பம்நல் காய்![3]மத பூதரத்தின்
கோவேறு சற்குரு நாதா!வெண் சேவற் கொடிக்கையனே. 5

கொடியோர்கள் வாழ்வது கண்டென துள்ளம் கொதித்தயரும்
படி[1]யோரஞ் செய்வது நீதிகொல் லோ!பெரும் பாரளந்த
நெடியோனில் வாழ்வுறச் செய்தருள் வாய்![2]செந் நெருப்(பு) உமிழும்
முடியோங்கு மெய்க்குரு நாதா!ஓர் ஆறு முகத்தண்ணலே. 6

---

4. 1. சூரியன், சிவன், சத்தி, திருமால், கணபதி, கௌமாரம் என்பன ஆறு.

5. 1. சேவு ஏறும்–இடபத்தில் உலாவருகின்ற. 2. திருமகள்–கலைமகள் (இவரால் விளைவது செல்வம் கல்வியாலான இன்பம். 3. மத–மதத்தைப் பொழிகின்ற. பூதரம்–மலைபோன்ற. கோ–அரச யானைமீது.

6. 1. இவ்வாறு ஓரம்–ஒருபட்சமாக. 2. நெருப்பு உமிழும்முடி–கனல்போன்ற செந்நிற ஒளியுடைய இரத்தினமுடி எனக் கொள்க.

அண்ணுந் தொருகுள்ளன் ஆனையி லேகும் அரசனிடம்
சுண்ணும்பு கேட்டுத் தவித்திடல் போல்உன் தொழும்புசெய்து
தொண்ணுந் தலைந்து துயரமுற் றேன்புலித் தோலுடுத்தோன்
கண்ணும் பரம குருநாத னே!அருட் காட்சிநல்கே. 7

நல்கறி யார்தம் மனைதோறும் நாளும் நடந்(து)அவர்க்காம்
பல்கதை பேசித் திரியாமல் நின்புகழ்ப் பாடல்மிகச்
சொல்கவு மார ருடன்சேர்ப்ப தென்றுகொல் சூழ்வினையை
வெல்கரு ணைக்குரு நாதா![1]பல் கோடி விழிக்கந்தனே. 8

விழிக்கும் [1]கருணைத் திருநாட்டத் தால்என் வினைமுழுதும்
ஒழிக்கும் திறமை உனக்கில்லை யோ?அமிழ்(து) ஒத்ததமிழ்
கொழிக்கும் புலவர் குருநாத னே!பெருங் கோரமுற்றுப்
பழிக்கும் சிலர்க்கஞ்சி னேன்அறி யாய்கொல்! பகர்ந்தருளே. 9

பகர்ந்தநின் சொற்களை நம்பியென் நெஞ்சம் பரதவித்(து)ஈண்டு
அகந்தையுள் ளார்க்கஞ்சு கின்ற தறிந்தும் அருள்செய்திலாய்!
திகழ்ந்தவை வேற்கைக் குருநாத னே!உனைச் செந்தமிழாற்
புகழ்ந்ததற்(கு) ஈதுமகா லோ?பய னும்இப் புவியிடத்தே. 10

---

7. 1. உலகமொழி ஆனைமீது போமவன்பால், சுண்ணும்பு கேட்ட குள்ளன்போல' என்பது. மிகத் தாழ்ந்த தன் நிலைக்கும். இறைவனது உயர்ந்த பண்புக்கும் உள்ள வேறுபாடு. ஆனைக்கும் ஆட்டுக்கும் உள்ளதை அச கசாந்தாம் என்பர் வடநூலார். மலைக்கும மடுவுக்கும் என்பதும் இதுபோன்ற கருத்தேயாம். 2. தொண்ணுந்து—மிகவருந்தி.

8. 1. எல்லாவுயிர்களிடத்தும் கண்ணுயிருப்பவன், அல்லது அவ் வவ்வுயிர்களையும் கண்டருள்பவன் எனக் கொண்டு வியாப கம் கூறினர்.

9. 1. முருகனது திறந்த கண்கள் கருணையையுடையன 12. தீயோரை அழிப்பதற்குரிய தீக்கண் 6. இவை மூடியே யிருக்கும்.

இடங்கொண்ட பாருல கிற்றமி யேன்உன்னை [1]ஏத்தலுற்றும்
மடங்கொண்ட மாயைப் பெரும்பேய்க்குள் அஞ்சி வருந்துகின்றேன்
திடங்கொண்ட சித்தியும் முத்தியும் ஈந்தருள்! செஞ்சிகிமேல்
நடங்கொண்ட ஞான குருநாத னே!கந்த நாயகனே. 11

[1]நாய்போல் அலைந்(து)இரந் தெய்த்துன்னை இவ்வணம் நாடுகின்றேன்
தாய்போற் கருணை புரிந்தாள்வை யோ?பெரும் சஞ்சலத்தாற்
பேய்போல் மருள விடுப்பாய் கொலோஉமை பெற்றெடுத்த
சேய்போலும் [2]வந்த குருநாத னே!வினை தீர்ப்பவனே. 12

தீராக் கயமை யுடையார்தம் முன்றிலிற் சென்றலைந்து
பேராண்மை முற்றும் இழந்திளைத் தேன்,எனைப் பேணிஉன்னை
ஆராதிக் கும்படி செய்தருட் பேறும் அளித்தருள்வாய் !
கூராரும் வேற்கைக் குருநாத னே!எண்ணில் கோலத்தனே. 13

கோலா கலப்பசுந் தோகையில் ஏறிக் குலவுதுங்க
வேலா யுதத்தொடு தோன்றலென் றோ?உன்னை வேண்டுமென்னை
நாலா விதத்தில் வருத்துவ தேன்?கடல் நஞ்சமுண்டோன்
பாலா! பரம குருநாத ன(ம்)முதற் பண்ணவனே. 14

பண்கொண்ட வேதம் ஒருநான்கும் தேடும் பதுமமலர்த்
தண்கொண்ட சேவடி தந்தருள் வாய்!முன்பு தானவரால்
விண்கொண்ட சோகந் தவிர்த்தகந் தா!வெற்றி வேற்றெய்வமே!
கண்கொண்ட தோகைக் குருநாத னாகிய காரணனே. 15

---

11. 1. வழிபாட்டால் மாயை விலகும். ஆனால் வழிபாட்டால் மாயை விலகாமல் அஞ்சினேன் என்றால் உம்மை இழிவுச் சிறப்பு.

12. 1. நாய் குறிக்கோளின்றி ஓடித்திரியும். புலனிச்சையில் மிக்கது. எனவே நாயைப் பலரும் கூறுவர். 2. வந்த என்ற சொல், முருகன் முன்னமே உள்ள முதல்வன். "வந்தாங்கு உதித்தனன்" என்ற கந்த புராணத்துடன் ஒப்பக்கொள்க.

காரண மும்பல காரியம் யாவும், கரத்தில்வைத்த
[1]வாரண கேதனத் தான்எனத் தேறும்மெய் வாழ்வடைந்தும்
நாரணன் ஆதியர் போல்வாழப் பெற்றிலன், நான்மறைசொல்
பூரண சற்குரு நாதா!விண் ணூரைப் புரப்பவனே. 16

[1]புரந்தரன், வேதன், திருமால்,ஒப் போரும் புகழும்நலம்
[2]நிரந்தரம் நல்கவல் லாய்என்ன வேமிக [3]நேடும்என்னுட்
[4]கரந்தறி யாதவர் போலிருந் தாய்!இனிக் [5]காதலித்த
வரந்தரு வாய்!குரு நாதா!எங் கெங்கும் வசிப்பவனே. 17

பவந்தவிர்ந் துய்கை நினைத்துன்னை நாடிப் பணியுமென்னை
அவந்தரும் புன்னெறிக் கேன்விடுத் தாய்!குன்றி லாடல்செய்த
சிவந்தபொற் றுட்குரு நாதா! எனது திருப்புகழ்ப்பாட்(டு)
உவந்தனந் தந்தரம் பல்கோடி வார்த்தை உரைத்தவனே. 18

உரைக்கடங் காப்பர மானந்த வாரிதி பூ(டு)அலரும்
நிரைக்கம லம்பொரு நின்தாள் சுமக்கும்நன் னேயமுற்றும்
[1]வரைக்குலந் தோறும் மகிழ்வார்தம் மோடென்னை வைப்பதென்றோ?
[2]விரைக்குர வக்குரு நாதா!வை வேற்கர வித்தகனே! 19

[1]வித்தையிற் சற்றும் உதவா(து)இவ் வண்ணம்மெலியவிட்டாய்!
[2]தத்தைஎன் றென்னைப் பகர்ந்திலை யோ?அயிற் சத்திகொண்ட
முத்தைய னும்குரு நாதா! தொடுத்து மொழிந்தும்உள்ளப்
பித்தைவெல் லாதுழன் றேன்அறி யாய்எனப் பேசரிதே. 20

---

16. 1. சேவற்கொடி.

17. 1. இந்திரன். 2. எக்காலமும். 3. நினைக்கின்ற. 4. மறைந்து நின்றும். 5. விரும்பிய.

19. 1. மலைநிலந்தோறும்–மலைநிலம் முருகனுக்குரியதென்ற கருத்துக்கொண்டு சென்று வழிபடுவோர்.

2. மணமுடைய குராமலரையணிந்த.

20. 1. பலிதசித்தியுள்ள வாக்கு. 2. அருணகிரிநாதரான கிளியென்பதாக.

பேசுந் தமிழ்ப்பயன் நீநல்கு மாறு பெருமைஎண்ணிக்
கூசும் கொடுமை தவிர்வதென் றோ?பொடி கொண்டமட்டும்
பூசும் பரம குருநாத னே!பல [1]பூதரத்தும்
வீசும் பரிமளப் பூந்தாளின் ஆசையும் மிஞ்சியதே. 21

மிஞ்சிய மாதவம் செய்தறி யாதருள் வேட்கைகொண்டு
கெஞ்சிய என்னை மறந்தனை யோ?தமிழ்க் கிள்ளை எனக்
கொஞ்சிய வாயும் அடைத்தது வோ!குறக் கோதைகண்முன்
அஞ்சிய சற்குரு நாதா!நின் சொற்படி ஆடல்செய்யே. 22

செய்ய பவளத் திருமேனி யும்,பொடிச் சீரும்,ஒரு
கையணி தண்டும்மற் றோர்கையின் முத்திரைக் காட்சியும்இவ்
வையக மும்புகழ் வேல்புனை மார்பும், வயங்கவந்து
[1]மெய்யளிக் கும்குரு நாதன்அல் லாற்றெய்வம் வேறில்லையே. 23

இல்லைஎன் றூர்தொறும் சென்றலைந் தேற்றுடல் எய்க்கவிடும்
தொல்லை வினையைத் தொலைத்துன் துணைப்பதம் சூட்டும்வண்ணம்
[1]வல்லைநின் னுள்ளம் இரங்காத தேன்?எண்ணில் வண்டுகிண்டும்
[2]குல்லையந் தார்க்குரு நாதா!வை வேற்கரக் கொற்றவனே. 24

[1]கொற்றவை வேற்கைக் குருநாத னே!எனக் கூவும்என்னை
மற்றவர் போலப் பரதவித் தேங்கி வருந்தவிட்டாய்!
சற்றருட் பேறளித் தாண்டால் எனக்குத் தகாதுகொல்லோ?
பற்றகன் றோர்உறும் குன்று தோறாடிய பாதத்தனே. 25

பாதங் கருதித் தொழுவார்க் கிரங்கும் பரமகுரு
நாதன்என் றுன்னை அறியார்தம் பாற்பொய் நவிலவைத்தாய்!
வேதம் பகர்ந்தவ னாதியர் அஞ்ச விரிந்(து)அசைந்த
[1]சூதம் தறித்தவை வேல்புனை தோளுடைத் தூயவனே. 26

---

21. 1. பல மலைகள்தோறும்.
23. 1. உண்மையான திருவருட்பேறு.
24. 1. விரைவாக. 2. வெட்சிமலர்மாலை.
25. 1. வெற்றியுடைய கூர்மையானவேல்.
26. 1. சூதம்–சூரனை மாமரம் துண்டாகச்செய்த

தூயவெண் ணீற்றணி தோன்றவந் தென்னுடன் சொன்னசொற்கள்
மாய வுலகில் நிசமாக வேண்டி வருந்துமென்னை
நீயறி வாய்!உன்னை நானறி யேன்;இது நிச்சயம்காண்
சேயபொன் மேனிக் குருநாத னும்மயிற் [1]சித்தசனே. 27

சித்தரும் சற்குரு நாதன்என் றேத்தச் சிவன்விழியில்
உத்தமச் சேயென வந்தாய்!நின் சீர்த்தி யுரைக்குமென்னைப்
பித்தனென் (று)ஊரவர் ஏசுகின் றார்இனிப் பேணிநின்மெய்ப்
பத்தனென் றேதப் பணித்தாள வேண்டும் பரமுனக்கே. 28

பரந்தாமன் நான்முகன் ஆதியர் போற்றும் பரமன்முன்னுள்
இரந்தான், அவன்மைந்தன் நீஎனக் கேட்டுன் இடத்தெனக்கோர்
வரந்தாஎன் றேற்று மறுகுகின் றேன்,எதிர் வந்தருள்வாய் !
[1]புரந்தா தரிக்கும் குருநாத னும்மயிற் புண்ணியனே. 29

புண்கொண்ட நெஞ்சம் புனித பரானந்த போதமுற்றுக்
கண்கொண்ட தோகை மயில்மீ(து) உனைத்தினம் காண்ப
துண்டோ?
தண்கொண்ட தென்பொதி யைக்குறு மாமுனி தன்னுளத்தில்
[1]எண்கொண்ட தாட்குரு நாதா!என் றென்றும் இளையவனே. 30

இளையமின் னூர்தம் முலைப்போக மேநலம் என்னுமயற்
[1]றளையடைந் தோரெனத் தோற்ற விட்டாய்!நின் சடாக்கரத்தால்
விளையுமெஞ் ஞானம்என் றீந்தருள் வாய்!எழு வேலையினும் 31
[2]அளையும் கரத்தெம் குருநாத னே!உமை யாள்மைந்தனே.

மைந்தா எனஉமை கூவி வருந்த வருங்கருணைக்
கந்தா! உனைக்குரு நாதன்என் றோர்ந்து கருதும்என்முன்

---

27. 1. சித்தசன்–மனதில் தோற்றுபவன்.
29. 1, காப்பாற்றி ஆதரவு செய்கின்ற.
30. 1. எண்கொண்ட (தியானிக்கின்ற)
31. 1. தளை–விலங்கு. 2. ஏழுகடலையும் கலக்கக்கூடிய, கை, என்று மட்டும் கூறியதால் வேலையணிந்த என்பது உள் ளுறையாய்க் கொள்ள உள்ளது காண்க.

வந்தார்வம் நல்கஇத் தாமத மேன்?என்றன் வாழ்வனைத்தும்,
[1]நிந்தாதி யாம்இழி வெல்லாமும், சத்தியம் நின்னருட்கே. 32

நின்னரு ளேகதி என்றெண்ணி நாடும்என் நெஞ்சகத்தில்
உன்னது கோலம் இலங்காத(து) என்கொல் [1]உரகமுண்ணும்
பொன்னவிர் தோகை மயிலேறி உம்பர் புகழவரும்
[2]தென்னவ ஞன குருநாத னே! அயிற் றிண்புயனே. 33

திண்ணிய மெய்யுணர் வுள்ளார்கள் போலத் திகழ்ந்தடியேன்
பண்ணிய பாவம் அளவு படாது; பரிந்தளித்தாண்(டு)
எண்ணிய வாழ்வுறச் செய்வாய் கொலோபுனத் (து)ஏனல்வள்ளி
நண்ணிய தோட்குரு நாதா!முச் சங்கத்து நாவலனே. 34

[1]நாவலம் பொன்னிற் சிறந்தபல் பாடல் நவின்றும்என்றன்
ஆவல்முற் றும்படி செய்திலே யே!இனி யாகிலும் இக்
கேவலந் தீரக் கிருபைசெய் வாய்!தமிழ்க் கிள்ளைமெச்சும்
சேவலங் கைக்குரு நாதா!விண் ணோர்குல சேகரனே. 35

[1]சேகரம் நின்றிருப் பாதங்க ளேஎனச் சிந்தைசெய்தும்,
பாக மதுரத் தமிழ்பாடிச் சூட்டியும், பைம்பொன்இச்சைச்
சோகம் ஒழிக்கத் துணிந்திலே யே!பசுந் தோகைமயில்
வாகனச் சற்குரு நாதா!சற் றேனும் மனமிரங்கே. 36

---

32. 1. எனது சிறந்த வாழ்வும், நிந்தைக்குரிய தாழ்வும் உன் திருவருளுக்கேயாம். எனக்கென இல்லை என்க.

33. 1. பாம்பை உணவாகக்கொள்ளும் மயில். 2. உக்கிரகுமார பாண்டியனுகிய.

34. 1. தினைப்புனம் காத்த வள்ளி.

35. 1. மேருமலையில்– பொன்மயமான நாவல்மரம் உளது. அதிலிருந்து விழும் பழமும் பொன்னுகும். மேருமலையும் பொன். அந்த நாவல் மரப் பழம் சாருக ஓடும். அந்தப் பொன் மிக உயர்வு ஆம் அதைவிட உயர்ந்தது தமிழ் என்பதாம்.

36. 1. தலையில் அணிவது.

இரங்காத வன்னெஞ் சுடையார்தம் முன்றிலுக் கேகிநித்தம்
குரங்காம் எனப்பற்க ளெல்லாமுங் காட்டிக் கொதித்தயரா
வரங்கா தலிப்ப(து) அறிந்திலே யோ?என்று வந்தருள்வாய் !
[1]மரங்காதும் வேற்குரு நாதா!நின் போற்றுணை மற்றிலையே. 37

மற்றையர் பாற்சென்(று) இரவாதுன் ஈகையில் வாஞ்சை கொண்டேன்
அற்றையிற் சொன்னசொற் போல்அரு ளாத(து) என்,அச் சொல்வம்போ?
[1]பொற்றையி லாடும் குருநாத னே!நின்சொற் பொய்த்தொழியா(து)
இற்றையில் இப்போழு தேவிளை யாட்டொன்(று) இயற்றுதியே.39

இயலா தியதமிழ் ஓர்மூன்றும் பாடும் எழிற்புலமைச்
செயலா னதைத்தரல் நீயேஎன் றுல்?இனிச் செம்பொன்வெஃகும்
மயலால் வருந்த விடாதருள் வாய்! குற வள்ளிவிழிக்
கயலால் மருண்ட குருநா தனும்அயிற் காவலனே. 39

[1]காவகத் துற்றவர் தம்பெரும் போகமும் கைத்துன்அருட்
பாவலன் என்றுல கோர்பகர் பேறும் படைத்துளநான்
சேவலங் கேதனச் சீர்காண வேண்டல் தெரிந்திலேயோ?
மூவருக் கும்குரு நாதா!வை வேற்கை முருகையனே. 40

முருகாஎன் றோர்மொழி மாத்திரம் கூறிய மொய்குழற்பெண்
அருகாகி அங்கைமுன் ஈதல்மெய் யேல்,என்னை ஆண்டுகொள்
ஒருகாலம் உண்டென நம்புகின் றேன்,சங்கம் ஊதியமால் [ளும்
மருகா!வை வேற்குரு நாதா!என் நெஞ்சினுள் வஞ்சமின்றே. 41

இன்றே எனைத்தடுத் தாண்டுகொண் டுன்னருள் ஏற்றம்நல்கி
நன்றே விளக்கவல் லாயல்லை யோ?குரு நாதன்என
நின்றேதம் தீர்த்(து)அரன் தன்னுடன் ஓர்சொல் நிகழ்த்தியபொற்
குன்றே! அளவற்ற குன்றுதோ றுடிய கூத்தினனே. 42

---

37. 1. மரத்தைக்கொன்ற (சூரனை மாமரம் அழிய) காதுதல்– கொல்லல், காதல் இடைக்குறை.
39. 1. மலை.
40. 1. கற்பகமரத்தினரான இந்திராதியர் போகங்களை வெறுத்து.

கூத்தாடும் தோகை மயிலேறி அன்பர் குழாத்தொடென்னைக்
காத்தாள வேண்டி வரும்நாள்என் றோ?தினைக் காட்டுவள்ளி
[1]சேத்தாள் வணங்கும் குருநாத னே!உனைத் தேடிநொந்து
[2]நீத்தாருட் சீரியன் போல்வேடங் காட்டியும் நின்றவனே. 43

நின்ற நிலையும் தடுமாறி, உண்மை நெறிபிழைத்தும்,
உன்றன் திருவருட் பேராசை ஒன்றும் ஒழிந்ததின்றால்
என்றன்பர் தம்முடன் கூட்டுவை யோ?இகத் தெண்ணில்பல
குன்றங் கொளுங்குரு நாதா! சடாக்கரக் கொற்றவனே. 44

கொற்றவை வேற்குரு நாதா!என் றேதினம் கூவும்என்னை
நற்றகை சாலும் முனிவோர் குழாத்தின் நடுவைத்திடா(து)
உற்றவர் போற்பல உண்மைசொற் றிவ்வா(று) உழலவிட்டாய்!
சற்றருட் பார்வைசெய் (து)ஆள்இனி மேலும் சகிக்கரிதே. 45

அரிதாம்உன் நாமங்கள் ஆயிரத் தொன்றை அறைந்ததனால்
உரிதா னுழக்கி ரண்டாகிய உண்மை உணர்ந்தபின்னும்
விரிதா ரணியில்இவ் வாறடி யேன்மனம் வேவதென்னே?
பெரிதான சீர்க்குரு நாதா!வை வேலைப் பிடித்தவனே. 46

பிடிநிகர் மென்னடை யோ(டு)இம வான்பெற்ற [1]பெய்வளையை
வடிஅயி லாக்கிப் புனைந்துபல் கோடி மலையினும்போய்க்
[2]கொடிநட மாடும் குருநாத னே!உனைக் கும்பிடுமெய்
அடியவர் தம்புடை யூடெனைக் கூட்டி அருள்வதென்றே. 47

என்றும்நின் றருட்சுவை வேண்டி யுருகி இளைக்குமென்னைப்
பொன்றுமுன் ஆளக் கருதுகண் டாய்!வளம் பூத்தபல
குன்றுதோ றாடும் குருநாத னே!முன் குறித்தவற்றை
நன்றுநன் றென்றொப்பி இப்போது கைவிடல் ஞாயமின்றே. 48

---

43. 1. சே-தாள்–சிவந்தபாதம். 2. இல்லறவாழ்வைத் துறந்தவர் களில்.

46. 1. உரிதான்உழக்கிரண்டு. உரி, உழக்கு என்பன பழங்கால முகத்தலளவை.

47. 1. பெய்வளை–பார்வதி. 2. முருகன் கூத்து.

ஞாயம் பலவும் அறிந்துள்ள நீஎன்னை நாட்டிலுள்ளார்
பேயன்என் றேச விடலாகு மோ?இனிப் பேணியொரு
தாயக மாகிமுன் நின்றருள் வாய்!நெடும் சத்திகொண்ட
சேயதிண் டோட்குரு நாதா!விண் ணோருட் சிறந்தவனே. 49

சிறந்தபல் குன்றங்கள் தோறும்நின் றுடும்நின் சீரடியை
மறந்தவர் போலப் பரதவித் தேன்.மயில் வாகனத்தில்
நிறந்தழைக் கும்கதிர் வேலோடு வந்துமுன் நின்றருள்வாய்!
[1]இறந்தழி யாக்குரு நாதா!என் னுள்ளும் இருப்பவனே. 50

[1]இருப்புவன் நெஞ்சக் கொடியேனும் நின்னருட் கிச்சைகொண்டு
திருப்புக ழாயிரம் செப்புகின் றேன்,மெய்த் திருத்திநல்கி
[2]நெருப்புறழ் மேனி யொடுதோகை மீதெதிர் நின்றிலையே
[3]பொருப்புடைச் சற்குரு நாதா! கடம்பு புனைந்தவனே! 51

[1]புனைந்துரைக் கும்குணம் சற்றுமில் லாதஎன் புன்கவியும்
[2]வனைந்தபொன் [3]நீப மொடுசேர்வ தென்றுகொல்! மாமலர்த்தாள்
நினைந்தும்இவ் வாறு வருந்தல்நன் றோ?வஞ்சர் நெஞ்சமஞ்ச
முனைந்தகை வேற்குரு நாதா! குறக்கொடி மோகனனே. 52

மோகக் கடலிற் குளியாமல் உன்னருள் முத்தியினுக்(கு)
ஏக மனத்தொடு மெய்த்தவ மேசெய் தினைப்பவர்போல்
தேகம திற்[1]குறி காட்டியும் இவ்வணம் சீரழிந்தேன்
கா!கரு ணைக்குரு நாதா! மனோன்மணி கைக்குருந்தே. 53

---

50. 1. "முருகன் பிறவான் இறவான்" என்ற கந்தரநுபூதியுடன் நோக்குக.

51. 1. இரும்புபோன்ற கடினமான. 2. சிவந்த திருமேனி. 3. பல மலைகளையுடைய.

52. 1. கற்பனையாகக் கூறுத பாடல். 2. கட்டிய, நீபம் – கடம்பமாலை.

53. 1. குறி–சிவசின்னமான நீறு, அக்கமாலை, ஆதியன.

குருந்தையின் கீழொரு [1]வேதிய ஞர்செவி கொள்ளும்வண்ணம்
திருந்துசொற் கூறிய [2]தேசிக னும் சிரங்குனிய
வருந்திருத் தாட்குரு நாதா! கலாப மயிற்பரிமேற்
பொருந்துகை வேலொடு முன்தோன்றி ஆள்!அது புண்ணியமே.

இயமானன் ஆகிய [1]எட்டும்நின் சீருரு என்றுணர்ந்தும்
கயல்போலும் கண்ணியர் மோகாந்த காரக் கடற்குளித்தேன்
வயமீறும் வேலுடன் வந்தருள் வாய்!குற வள்ளிமின்மேல்
மயலான சற்குரு நாதா! மெய்ஞ் ஞான வரோதயனே. 55

வரந்தந்த வண்ணம் பலியாது கண்டு வருந்தவிட்டாய்!
[1]கரந்தந்து காக்கும் கடனுனக் கேஇந்தக் காசினியில்
உரந்தந்து ளார்!மற்றுள் ஆரோ இருப்பினும் உன்னருளே
[2]பரந்தந்த சற்குரு நாதா!வை வேற்கைப் படைத்தெய்வமே. 56

படைக்கும் பிரமனைப் பாலிக்கும் மாயனைப், பாசமின்றித்
தொடைக்கும் சிவனை, நினைத்தென்றன் நெஞ்சம் துடிக்கின்றதாற்
புடைக்குங் குமநிறத் தோள்பாடு மென்னைப் புவிப்பிணக்கில்
அடைக்கும் பரம குருநாத னே!விரைந் தாண்டுகொள்ளே. 57

கொள்ளத் தகுபவும், கொள்ளா தனவும், குறித்தறியேன்
எள்ளற்குள் அச்சமொத் தேத்தும் புகழினுக்கு இச்சையுள்ளேன்
தள்ளப் படாதுகை தந்தாள வேண்டும்: தமிழ்முனிவன்
உள்ளத்தி லாடும் குருநாத னே!எண்ணில் ஊரவனே. 58

ஊரனந் தம்,குன்று கோடாநு கோடி, உடையவுன்றன்
பேரனந் தங்களில் ஒன்றே பகரும்நற் பேதையைப்போற்
சீரனந் தந்தரும் நின்னருள் வாழ்வினிற் சேர்வதென்றோ
[1]நீரனந் தந்தரு ளுங்குரு நாத!என் நேயத்தனே. 59

---

54. 1. அமாத்திய அந்தணரான வாதவூரர். 2. சிவபிரான்.

55. 1. உயிர்–எண்வடிவம். மண், நீர், தீ, காற்று, வெளி, உயிர், சந்திரன், சூரியன், இவை இறைவடிவம்.

56. 1. கைகொடுத்து. 2. பரம்பொருளான அருவத்தினின்றும் உருவான.

59. 1. நீர்–சற்குணம்.

நேயம் பெருத்து மலைதோறும் போய்த்தினம் நின்புகழ்சொல்
வாயன்பர் தம்மிடை நாயேனும் வாழ்வுற வைப்பதென்றோ?
மாயன் பரவும் மருகா!வில் வேடர் வளர்த்த பெண்முற்
போயங் கிரந்த குருநாத னே![1]செச்சை பூண்டவனே. 60

பூண்ட அராஅணிப் பெம்மான் நுதற்கட் பொறிஎனவந்(து)
ஆண்ட வுமேசனைக் கீன்றாய்!நின் பொன்னடிக் கன்புசெய்து
வேண்டல்எல் லாம்தர வல்லாயன் றோ?வெற்றி வேல்பிடித்துத்
தாண்டவம் செய்குரு நாதா!பல் கோடி சயிலத்தனே. 61

சயிலங்கள் தோறும் தமிழ்பாட நாடுமென் றன்முன்எழில்
மயிலின்கண் ஏறி வருவதென் றோ?வஞ்ச [1]மாவைவென்ற
அயில்அங்கை கொண்ட குருநா தனே!எண் ணில்[2]ஆதவர்தம்
வெயில்அந்த மேனிய னே!முழு தோர்ந்துள்ள வித்தகனே. 62

வித்தைகள் [1]எட்டும், பிறவாத முத்தியும், வேண்டி நின்கைத்
[2]தத்தைசொற் பாடல்க ளாற்றுதி யாதவர் தம்மையொத்தேன்
[3]இத்தை யறிந்தும் இரங்குகில் லாய்!இனி என்னசெய்வேன்
முத்தைய னான குருநாத னே!வள்ளி மோகத்தனே. 63

மோகக் கடலிற் குளிக்கின்ற என்னை, முதிரருட் சீர்த்
தாகத் தழுந்தவும் கண்டனை யே!இனித் தாமதியா(து)
ஆகத் தமைந்தவிர் [1]கண்களும் காணவந் தாண்டுகொள்வாய்!
ஏகத் துவக்குரு நாதா!வை வேலொன் றெடுத்தவனே. 64

---

60. 1. வெட்சிமலர்.

62. 1. கடலில் தோன்றிய சூரனை மாமரம். இயல்பான மாமரமல்ல. ஆதலின், வஞ்ச மா என்றார். 2. பல சூரியர் ஒருங்கு சேர்ந்தாற்போன்ற செந்நிற ஒளி முருகனை அழகு செய்கிறது என்பதாம்.

63. 1. அட்டமாசித்திகள். 2. அருணகிரிநாதரான கிளி. 3. எதுகை நோக்கி, இதை என்பது இத்தை என்றாயது.

64. 1. மனக்கண்ணாற் கண்டது போதாது. தூலக்கண்களும் காண வருக உம்மை இறந்தது தழீயஎச்சம்.

[1]எடுத்தபொற் ருளொன் றுடையானுக்(கு) ஆனந்தம் ஈந்தவுன்னை
அடுத்தஎன் துன்பம் அழியாத(து) என்கொல்? அறைந்தருள்வாய்!
[2]உடுத்தலம் தொட்டு வளர்இம வான்[3]மகள் ஒண்முலைப்பால்
மடுத்தசெவ் வாய்க்குரு நாதா! கலாப மயூரத்தனே. 65

அத்தனும், கும்ப முனியும்,நின் தோள்புனை [1]அஞ்சுகமும்
ஒத்தமெய்ச் சித்தனென் றென்னையும் வாழ்விக்க உன்னுவையோ?
புத்தமு தன்னசொற் குஞ்சரி வள்ளி புணர்கணவா!
உத்தமச் சற்குரு நாதன்என் றேத்துநர் உள்ளத்தனே. 66

உள்ளத்தில் உன்றன் உருவம்உன் னுமற்பல் ஒண்[1]தொடியார்
[2]வள்ளத் தனத்திச்சை கொண்டலைந் தாலும்,நின் மாமலர்த்தாள்
கொள்ளத் தகுமவன் என்றொரு [3]நாமம் கொடுத்திலையோ?
கள்ளத் தொழிற்குரு நாதா!வை வேற்கரக் காங்கெயனே. 67

[1]காங்குடற் சூரனைக் குத்தித் திறந்த கதிரயிலைத்
தாங்குகைச் சற்குரு நாதனை யேதினம் தஞ்சமெனல்
ஓங்குசொற் பாடல் உரைக்கின்ற என்னை உலகிகழும்
பாங்குற ஏன்விதித் தாய்!கஞ்ச மாமலர்ப் பண்ணவனே. 68

பண்ணும் கொடுமை அனந்தம் குலாவும் படிறனுன்னை
எண்ணும் தவர்கொள்ளும் இச்சைகொண் டேன்,இனி என்செய்
விண்ணும் புவியும் வியன்பா தலமும் விரும்பிநித்தம் [வையோ?
அண்ணும் கருணைக் குருநாத னே!என்னை ஆண்டவனே. 69

[1]ஆண்டலைக் கேதனம் வாழிஎன் றேத்தி அருட்பெருக்கம்
வேண்டவிட் டார்உனை யன்றியுண் டோ?வெற்றி வேல்புனையும்

---

65. 1. தூக்கிய திருவடி (நடராச வடிவம்). 2. கார்த்திகை மாதர்கள். 3. உமையவள்.
66. 1. கிளி.
67. 1. வளையலணிந்த மாதர். 2. கிண்ணம். 3. முருகதாசன் (முருகன் அடிமை) என்ற பெயர்.
68. 1. கருமையான மேனி.
70. 1. சேவற்கொடி.

[2]தூண்டகு பன்னிரு தோட்குக னே!பசுந் தோகைமயிற்
றூண்டவச் சற்குரு நாதா! [3]அகோர சடாக்கரனே. 70

சடமெடுத் திட்ட பயன்வேண்டிப் போற்றுமென் றன்மிசைநீ
அடமெடுக் கின்றது நீதிகொல் லோ?செம்பொன் அம்பலத்தில்
[1]தடமெடுத் தாடுநர் சற்குரு நாதா! [2]தழல்விடவாய்ப்
படமெடுக் கும்பணி மீதாடும் தோகைப் பரிக்கந்தனே. 71

[1]பரிக்கும் கலாப மயில்மீ துனேத்தினம் பார்க்கநண்ணிச்
சிரிக்கின்ற வர்க்கொர் இலக்காகி னேன்,எனைத் தேற்றலென்றோ?
அரிக்கு மருமகன், எங்குரு நாதன்.என் பார்க்கெளியாய்!
[2]கரிக்கும் [3]கிரிக்கும் வடிவேல் விடுத்த கரத்தண்ணலே. 72

கரத்திற் றுலங்கும் கதிர்வேலும், தோகைக் கனமயிலும்,
[1]உரத்திற் கமழ்ந்த குராமலர் மாலையும், உம்பரெல்லாம்
சிரத்திற் சுமந்த திருத்தாளும், என்முன் திகழவந்தாள்!
வரத்திற் சிறந்த குருநாத னே!வள்ளி மாப்பிள்ளையே. 73

[1]மாப்படச் செற்ற வடிவேற் குகனை, மலிந்தவெள்ளைக்
[2]காப்பணி வார்நுதற் கண்மணி யாவரும் கந்தனைப்,பல்
பாப்பகர் கின்றவர் தம்குரு நாதனைப், பற்றிநின்று
[3]கோப்பனந் தம்பெற்று வாழ்ந்தார் அளவற்ற கோடியுண்டே. 74

கோடாத வுண்மை நெறியாளர் தந்திருக் கூட்டமின்றிக்
கேடாளு வாரொடு பன்னாட் பழகிக் கிலேசமுற்றேன்

---

70. 2. தூணைஒத்த (பெரிய) 3. மிகப்பெரிய பயனளிக்கவல்ல.
71. 1. திருவடி தூக்கி. 2. தீயைஒத்த கொடுமையான விடத்தை உமிழும் வாயுள்ள பாம்பு
72. 1. தாங்கிக்கொண்டுள்ள. 2. தாருகனான யானைமுகன். 3. கிரவுஞ்சமலை.
73. 1. மார்பில்.
74. 1. மாமரம் வீழ்ச்சியடைய. 2. திருநீற்றுப் பூச்சுடைய சிவன். 3. மேம்பாடு.

[1]ஆடா வது,மயி லாவது, குஞ்சர மாவது,கொண்(டு)
ஓடாவந் தாள்குரு நாதா!வை வேற்கரத் துத்தமனே. 75

உத்தம மாய திருவேட மிட்டும், உலகிலுள்ளார்
பித்தன்என் றேசத் திரிந்தலுத் தேன்,அருட் பேறளித்துச்
சித்தரும் மெச்சத் தகும்வாழ்விற் சேர்த்தருள்! செந்தமிழ்ச்சொற்
பத்தருக் கான குருநாத னே!உமை பாலகனே. 76

பாலன்ன சொற்குறப் பேதைதன் கொண்கனைப், பன்னிருகை
வேலனைக், குன்றங்கள் தோறும்நின் றாடும் விநோதனைப்,பல்
கோலம் பொருந்தும் குருநாதன் என்று குறித்துணரும்
சீலன், பொதியை முனிநாதன் போலும் சிறப்பினனே. 77

[1]இனனொரு கோடிக ளொப்பாம்நின் கோலத்தை, என்னதுபுன்
மனநினைக் கத்தக்க வண்மைய தோ?மயில் வாகனத்தில்
அனநடை மாதர் இருவர்தம் மோடும்வந் தாண்டருள்வாய்!
[2]கனகவை வேற்குரு நாதா! கருணைக் கடாட்சத்தனே. 78

கடமாவிற் செங்கதிர் வேலொடு தோன்றிப்பல் கற்கள்தொறும்
நடமாடும் பங்கயத் தாள்சூட்டி ஆண்டருள்! நாகமணி
விடமாகு மாயமின் னார்நெஞ்சம் யாவும் விரும்புதற்கோர்
இடமான தோட்குரு நாதா!வெண் சேவல் எடுத்தவனே. 79

எடுக்கும் கலாப மயில்மீது தோன்றி,இன் றென்கலியைக்
கெடுக்கும் கருணை உனக்கில்லை யோ?பசும் கிள்ளைஒன்று
தொடுக்கும் தமிழ்க்குரு நாதா!என் றேத்தித் தொழுதுருகி
அடுக்கும் தவர்க்கெளி யோனே!எங் கெங்கும் அமர்ந்தவனே. 80

அமரர்பல் லோர்க்கொரு தாரக மாகி அவிர்ந்தவுன்னைத்
[1]தமரவ ரோடும் தொழுவேனை யாளத் தகாதுகொல்லோ?
[2]பமரம் உலா(ம்)மலர்ப் பூசைசெய் யென்னப் பகர்ந்திலையோ
[3]சமரச போதக் குருநாத னே! அயிற் சண்முகனே, 81

---

75. ஆடு, மயில், யானை இவை முருகனுக்குரிய வாகனங்களாகும். 2. ஓடி (விரைந்து).

78. 1. சூரியர் பலர் சேர்ந்தது போன்ற. 2. பொன்மயமானதும் கூர்மையதும் ஆனவேல்.

81. 1. சுற்றத்தார். 2. வண்டு, ப்ரமரம் என்ற வடசொல்லின் திரிபு. 3. ஞான உபதேசம் புரிகின்ற.

முகமா றுடைய குருநாதன் என்றுன்னை முன்னுமென்றன்
அகமான கோயிலுள் நீவந் திராவிடில், ஆழிசுற்றும்
சகமாயை சூழ்ந்தும்இவ் வாறுன்னை நாடித் தவிப்பன்கொலோ?
மகமாயி ஈன்ற புதல்வா! பலகோடி மலைக்கந்தனே. 82

கந்தக் கடம்ப மலர்மாலை போலென் கவியையும்கொண்(டு)
இந்தக் கடற்புவி முற்றும் புகழும் இயல்பளித்(து) ஆள்!
சொந்தக் கடவுள் எனத்தினம் போற்றும் தொழும்புடையார்
அந்தக் கரணக் குருநாத னே[1] சயி லாதிபனே. 83

ஆதியில் நீசொன்ன சொற்களை நாடி அலமருவேன்
கோதின்மெஞ் ஞான நெறிசேர்வ தென்றுகொல்! கொற்றமிகும்
சோதிவை வேற்குரு நாதா!இவ் வாறெனைத் [1] துன்புறுத்தல்
நீதியன்(று) அன்(று)ஐய னே!இனி யேனும் நிசம்சொல்லிடே! 84

நிசமொன்று, பொய்பல கூறுகின் றேனைஇந் நீணிலத்தோர்
[1] பிசகன்என் றோதவும் கண்டனை யேஇனிப் பேணியருள்!
வசமுறும் சிந்தையு ளாருடன் சேர்ந்து மகிழவைப்பாய்!
[2] அசமுகைக் குங்குரு நாதா!மின் போலும் அயிலத்தனே. 85

அயிலேந்தி ஓரிரு மங்கைய ரோடும் அணிக்கலப
மயிலேறி வந்தருள் செய்குவை யோ?இம வான்வளர்த்த
குயிலே யனைய பிராட்டிமைந் தா!பல கோடிபெரும்
சயிலேச னை குருநாத னே!துயர் தாங்கரிதே. 86

தாங்கா வறுமைக் கடலூ(டு) அழுந்தித் தயங்குமெனக்(கு)
[1] ஆங்கா ரணம்பகர்ந் தாய்! அந்த வாறினி ஆள்வதென்றோ?

---

83. 1. மலைகட்கெல்லாம் தலைவன்.
84. 1. பத்தி சோதனை செய்வது.
85. 1. பிழையுடையவன். 2. அசம்–ஆடு.
87. 1. ஆங்காரணம்–"நீ ஒரு காரணத்துக்காக பிறந்துள்ளாய்" என முருகன் கூறிய தன்அநுபவம் கூறினர்.

காங்காருந் தோகை மயில்வடி வேயெனக் கற்றவர்சொல்
ஓங்காரச் சற்குரு நாதா! எனையும் உடையவனே. 87

உடைமணி, தண்டைச் சிலம்(பு)ஆர்க்கத் தோகையில் ஓடிவந்து
[1]விடையவன் தன்னிடம் சொன்னதைச் சொற்றருள்! வென்றிவை
படையணிக் கைக்குரு நாதா! அமரர் பயம்தவிர்த்துத் [வேற்
தடையறக் குன்றங்கள் தோறும் திரியும் தனித்தெய்வமே. 88

தனித்துன்னை நாடுமப் போதுமென் நெஞ்சம் சகமயக்காற்
பனித்திடச் செய்யும் வினைப்பேயை வென்றுன் பதமலர்த்தேன்
இனித்திடும் நாளொன்றும் உண்டுகொல் லோஇனி என்செய்கு
வேன்
தொனித்தவெண் சேவற் குருநாத னே!அயிற் றேட்கந்தனே. 89

[1]தோட்டாமை ஒன்றுகொன் றூற்கிளை யானைத் துலங்குபர
வீட்டாவற் காரர் குருநா தனை,வென்றி வேற்குகனைப்,
பாட்டாற் றுதிக்கவல் லார்க்கெளி யானைப் பரண்குறத்தி
தாட்டா மரைத்தொண்டன் என்பார்க்கும் எய்தும் தவப்பயனே. 90

தவப்பெரு வாழ்வைக் குறியாமல் மங்கையர் தம்மைநத்தும்
அவப்[1]புலை யாட்டில் விடலா குமோ? விரைந் தாண்டருள்வாய்!
சிவப்பொருங் குள்ள திருமேனிச் சண்முகத் தெய்வமென்பார்
உவப்புறச் செய்யும் குருநாத னே!எங்கும் உற்றவனே. 91

உற்றசொல் ஒன்றுரைத்(து) ஒவ்வாமை பற்பல ஓதுமென்னைப்
பற்றல்விட் டுய்யும் வகையறி யேன்,அருட் பார்வைகொண்டென்
குற்றமெல் லாம்தவிர்த் தாண்டருள் வாய்!குறக் கோதைபுணர்
மற்றடந் தோட்குரு நாதா!தெய் வானை மனத்தவனே. 92

---

88. 1. இடபவாகனச் சிவன்.

90. 1. தோடு – முதுகின்ஓடு. திருமால் கூர்மாவதாரமெடுத்த போது, முடிவில் அதன் ஓட்டைத் தாம் அணிந்தார் சிவ பிரான். அத்தகையாரது இனிய புதல்வன்.

91. 1. புலை–ஊண் உடலின் இச்சையில்.

மனங்கொண்ட மட்டுக்கும் மேலாய துன்பம் [1]வருத்தினென்னைத்
தனங்கொண் டலைய விடலாகு மோ?செழுந் தாமரையோ(டு)
அனங் கொண்ட வேதனைக் குட்டிச் சிறையில் அடைத்ததனற்
[2]கனங்கொண்ட கைக்குரு நாதா! [3]குறிஞ்சியங் காவலனே 93

காவலில் லாத பயிர்போல வாடிக் கலங்குமென்றன்
ஆவலெல்லாந்தர வல்லாய்கொல் லோ?முன் அறைந்ததெல்லாம்
பாவலர் கண்முன் நிசமாகும் வண்ணமும் பார்த்திலையே!
[1]மூவலில் சற்குரு நாதா!வை வேற்கர முன்னவனே. 94

முன்னம் பகர்ந்த மொழியாவும் நாடொறும் முன்னும்என்னுள்
இன்னம்பல் வார்த்தையும் ஏன்சொல்கின் றுய்சொல்லி
என்னபயன்?
சொன்னவண் ணம்செயக் கண்டிலே னேபசுந் தோகையிவர்
[1]சின்னவ னுன குருநாத னே!அயிற் செங்கையனே. 95

கையா மதுரத் தமிழ்ப்பாடல் கேட்டும் கருத்திரங்கி
மெய்யான பேரின்பம் ஈந்திலை யே!வெற்றி வேற்குகனே!
பையா டரவ மிசையாடும் தோகைப் பசியமயில்
ஐயா! அருமைக் குருநாத னே!முற்றும் ஆனவனே. 96

ஆனந்த வாரி கடந்தோருக் கெய்தும் அதீதமென்னும்
மோனந் தரநினைக் கின்றதென் றோ?முழு தும்தெரிந்த
ஞானந் தழைத்த குருநாத னே!மறை நான்குரைத்த
கோனந்த நாளினும் அஞ்சப் புடைத்தகைக் கொற்றவனே. 97

---

93. 1. வரச்செய்து. 2. பெருமை. 3. மலைநிலம்.
94. 1. கெடுதல் இல்லாத.
95. 1. சிறு குழந்தைப்பெருமானுகிய.

கொற்றக் கலாப மயில்மீ தருகிரு கோதைநல்லார்
உற்றஉல் லாசத் தொடுதோன்றி ஆண்டருள்! [1]ஓதமுந்நீர்ச்
செற்றவை வேற்கைக் குருநாத னே!நற் றிருப்புகழ்நூல்
கற்றவர்க் கோர்துணை யாய்விளை யாடிடும் கந்தப்பனே. 98

கந்த மதகரி மீதேனும், கோரக் கருமருப்புச்
செந்தகர் வாகன மீதேனும், தோகைச் சிகிளனச்சொல்
பைந்தகைப் புட்பரி மீதேனும், வந்தருட் பாங்குநல்காய்!
சுந்தரச் சற்குரு நாதா!வெண் சேவற் றுவசத்தனே. 99

துவசம் பொருந்தனி வீரம் பெருக்கித், துகளணுகாக்
கவசமும் ஆகி, அடியாரை நாடொறும் காக்கும்;ஒன்னர்
அவசங் கொளத்திகழ் வேலுடை யான்,எண்ணில் ஆடலுள்ளான்
சிவசங் கரனும் தொழுங்குரு நாதன் திருவருளே. 100

முற்றிற்று.

## நூற்பயன் - வெண்பா.

செந்தா மரையான் திடுக்குற் றழப்புடைத்துக்
கொந்தாரும் நீபமணி கொற்றவேள் — [1]முந்தாதி
யான குருநாதன் அந்தாதிக்(கு) அன்புடையார்
ஈனமுழு துந்தவிர்வா ரே.

வேலுமயிலுந் துணை.

---

98. 1. குளிர்ந்த கடல். (ஆற்று நீர், ஊற்று நீர், மழை நீர் என்ற மூன்று முடையதால் முந்நீர் என்ற பெயர் கடலுக்கேற் பட்டது.

நூற்பயன் 1. முதன்மைக்கும் முற்பட்டவன். முன்னைப் பழம் பொருட் கும் முன்னைய பழம் பொருள்.

## நூலாசிரியர் அருளிய முக்கிய நூல்களுட் சில.

---

| | | | |
|---|---|---|---|
| புலவர் புராணம் (அச்சில்) | ... | | |
| திருவரங்கத் திருவாயிரம் | ... | 2 | 00 |
| தமிழலங்காரம் | ... | 0 | 50 |
| திருவாமாத்தூர்த் தலபுராணம் | ... | 1 | 50 |
| கௌமார முறைமை | ... | 0 | 50 |
| தியாஞனுபூதி (உரையுடன்) | ... | 0 | 50 |
| தேவகோட்டை முருகன் பிள்ளைத்தமிழ் | ... | 0 | 50 |
| சென்னை முருகன் பிள்ளைத்தமிழ் | ... | 0 | 50 |
| சுவாமிகள் வரலாறு (உரைநடை) | ... | 0 | 50 |
| சடகோபர் சதகத்தந்தாதி | ... | 0 | 50 |
| தண்டபாணி விஜயம் | ... | 1 | 50 |
| அருணகிரிநாதர் புராணம் | ... | 1 | 50 |
| தில்லைபாதி – நெல்லைபாதி | ... | 0 | 10 |

மற்றும் பிற.

கிடைக்குமிடம் :—

**தி. செ. முருகதாச ஐயா,**
தலைவர், கௌமார மடாலயம்,
திருவாமாத்தூர், விழுப்புரம் P. O.

ஹனுமான் அச்சியந்திரசாலை, விழுப்புரம்